## இத்திருக்கோயிலின் வரலாறு: (முன்னாள் ஸ்தானீகர்(1949)குமாரர் கை.காந்திபட்டர் அவர்களின் கூற்றுப்படி) :-

*நைமிசாரண்யத்தில் சூதமுனிவர் ரிஷிகளுக்கு புராணங்களை கூறியபோது தட்ச யாகத்தில் கலந்துகொண்டு சிவதுரோகம் செய்த தேவர்கள் அசுரர்களிடம் தொடர்ந்து தோற்றார்கள் அந்த அபராதம் நீங்க குற்றாலத்தில் சிவபெருமானை வழிபட்டு நன்மை அடைந்தார்கள் என்பதை கேள்வியுற்ற காமதேனு பசு திரிகூடமலையான திருக்குற்றாலத்தில் சிவபெருமான் எழுந்தருளியிருந்த சமயம் கற்பகவிருட்சம், சிந்தாமணியுடன் குற்றாலத்தை அடைந்து,இறைவனை சரணடைந்தது .*

*பின் தனது பால், உள்ளிட்ட பொருட்கள் அபர காரியங்களுக்கும் பயன்படுவதினால் ஏற்படும் குறைநீங்க விண்ணப்பித்தது.அதனுடைய உயரிய பண்பால் மகிழ்ந்து இறைவனும் திந்திரிணீ வனமென்னும் கங்கைகொண்டானை காட்டி இவ்விடத்தில் (சித்ரகங்கையான) சித்ராநதியின் தேனு தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து, கற்பகவிருட்சத்தை புளியமரமாக இருக்க பணித்து அதன் மூலத்தில் தன்னை வழிபடகூறினார் அதன் படியே தெய்வபசுவான காமதேனு,*

*இப்பகுதியிலுள்ள இராஜவல்லிபுரத்தை சார்ந்த சூர்யாக்யன் என்ற அந்தணருடைய பசுமந்தையில் சேர்ந்தது. புளியமரங்கள் நிறைந்த பகுதியாக இருந்த கங்கைகொண்டானில் அவ்அந்தணருடைய பசு மந்தையை, மேய்ப்பர் (கோனார்) மேய்த்து வந்தார். அவ்வாறு மேய்த்து வரும் பொழுது, ஒரு பசு மட்டும் பால் தரவில்லை. இதனை அறிந்த அரசர் மேய்ப்பரை கூப்பிட்டு, விசாரித்தார். இதுகுறித்து, உடனடியாக அறிந்து சொல்லுமாறு மேய்ப்பருக்கு உத்தரவிட்டார். மேய்ப்பரும் அவ்வாறே செய்வதாக பணிந்து கூறி சென்றார்.*

*மறுநாள் பசு மந்தையை மேய்க்கும் பொழுது அக்குறிப்பிட்ட பசுவை பின் தொடர்ந்து சென்றார். அப்பசு சித்ராநதியில் நீராடி, புளிய மரத்தின் அடியிலுள்ள ஒரு புற்றில் தானே பாலை சொரிந்தது. இதனை கண்ட மேய்ப்பர் அரசரிடம் சென்று இவ்விஷயத்தை பணிவுடன் கூறினார். அரசனும் அவ்விடத்திற்கு தன்படை பரிவாரங்களுடன் சென்று காண்பதாக கூறினார்.*

*மறுநாள் பசு மந்தையை மேய்க்க மேய்ப்பர் சென்ற பொழுது ,அரசரும் தன் படை, பரிவாரங்களுடன் பசுவினை பின் தொடர்ந்து சென்றார். மேய்ப்பர் கூறியது போல், பசுவும் புளியமரத்தினடியில் உள்ள புற்றில், பாலினை தானே சுரக்க கண்டார்.*

*உடனே, அரசர் தன் ஏவலாட்களை விட்டு அவ்விடத்தில் உள்ள புற்றினை அகற்ற கூறினார். ஏவலாட்கள் புற்றினை இடிக்க முற்பட்டனர். அப்பொழுது, புற்றினில் உள்ளே உள்ள இறைவனின் மேல் வெட்டுபட்டு குருதி பெருகியது. அரசர் பதைபதைத்து, புற்றினை*

சுத்தம் செய்து பார்க்கவும் என்று ஆணையிட்டார். அவ்விடத்தில் இறைவன் லிங்கதிருமேனியாய் காட்சிஅளித்தான்.

அரசர் (அங்கு இருந்த புளியமரத்தை வெட்டிவிட்டு) கோவில் கட்ட எண்ணினார்.ஆகவே மரத்தைவெட்ட முற்பட்டார். ஆனால், இறைவன் மரத்தை வெட்டவேண்டாம் எனவும், தாம் அறுபது கெஜதூரம் நகன்று செல்வதாகவும், பின் அவ்விடத்தில் கோவில் கட்டுமாறும் ஆணையிட்டார். அவ்வாறே இறைவன் நகர்ந்தும் சென்றார்.

ஏவலாட்கள் புற்றினை அகற்ற முற்பட்ட போது, இறைவனின் (லிங்க)உருவின் மேல் பட்ட வெட்டுதடத்தை இன்றும் நாம் காணலாம். வெட்டு பட்ட காரணத்தால் இறைவன் கபாலீசர் என்றும், நகர்ந்து சென்ற காரணத்தால் நடலிங்கம் என்றும் காரணப்பெயர்களால் அழைக்கப்படுகிறார். எனினும் நூற்றாண்டுகாலமாக "**இத்தலத்தில் இறைவன் பெயர் ஸ்ரீகைலாசநாதசுவாமி என்பதாகும்** "பற்பல முடியரசர்கள் ஆண்டபோதும் இத்தல இறைவனின் பெயராகிய ஸ்ரீகைலாசநாதர் என்பதனை மாற்ற முயலவில்லை என்பதிலிருந்து இறைவனின் பெருமையை அறியலாம்.

இவ்விதம் மூர்த்தி, தீர்த்தம், விருட்சம்,தலம் என சிறப்பு உடையது.

## இறைவன் புளியமரத்தடிக்கு எழுந்தருளியவிதம் :-

## (கர்ணபரம்பரை செய்தி)

ஸ்ரீகைலாயத்தில் இறைவன் இறைவியுடன், எழுந்தருளியுள்ளதொரு சமயத்தில், வாமதேவரிஷி என்றொரு முனிவர் இறைவனிடம் ஒரு வரம் கேட்டார்.

அதாவது, தான் பூலோகத்தில் தவம் செய்ய விரும்புவதாகவும், அதனால் தன்னுடைய தவத்திற்கு எவ்வித இடைஞ்சலும், ஏற்படாதவாறு (நவக்கிரகங்கள் போன்றவற்றால்) ஒருஇடத்தை காட்டி அருளும்படி, இறைவனிடம் வாமதேவரிஷி கேட்டார்.அப்பொழுது இறைவன் சித்ராநதி கரையோரம் உள்ள இச்சிஞ்சாவனத்தை காட்டியருளினார்.

ரிஷியும் தான் கங்கையில் ஸ்நாநம் செய்த பின், பூஜை செய்யும் வழக்கம் உள்ளவராதலால்,தன்னுடன் கங்கையையும் அனுப்பிவைக்கும்படி வேண்டுகிறார். இறைவனும் அவ்வாறே அருள். கங்கை தான் காசியில் இருப்பதால் இங்கு எவ்வாறு செல்லஇயலும்? என இறைவனிடம் வேண்டவும். இறைவன் நீ(கங்கை) ஒரே சமயத்தில்

அங்கும் இங்கும், இருக்க வல்லவள், என வரமளித்து கங்கையை அங்கும் இங்குமாய், இருக்க அருள்பாலித்தார்.

கங்கை தன்னுடன் இறைவனையும் எழுந்தருளுமாறு வரம் கேட்க, இறைவனும் மகிழ்ந்து அவ்வாறே வரம் அளித்து தானும் தன்பரிவாரங்களுடன் அவ்விடத்தில் எழுந்தருள்வதாய் கூறினார்.

அதன்படி வாமதேவரிஷி இவ்விடத்தில் தவம்புரியவும், கங்கையுடன் இறைவனும் இவ்விடத்திற்கு எழுந்தருளினார்.இவ்வாறு எழுந்தருளிய இறைவனை வாமதேவரிஷி தினமும் அருவநிலையில் வழிபட்டு வந்தார். காலம் கனியவே, நம்மை எல்லாம் உய்விக்க இறைவன் தன் திருவுருவை லிங்கதிருமேனியாய், புளியமரத்தினடி புற்றினுள் காட்டியருளினார். அப்பொழுதுகட்டப்பட்டதே இத்திருக்கோவிலாகும். இங்கு நவகிரக பிரதிஷ்டை செய்யபடவில்லை.இத்தலம் நவகோள்களினால் ஏற்படும் தோஷங்கள் போக்கும் தலமாக பக்தர்களால் போற்றப்படுகிறது.

வாமதேவரிஷி சன்னதி தவகோலத்தில் சுவாமியின் வாயு பாகத்தில் உள்ளார்.

## இத்தலத்தின் பெயர் காரணம்:-

## (கல்வெட்டுக்குறிப்பின் கீழ் கூறப்பட்டபடி)

இத்திருக்கோவிலை எடுப்பித்து கட்டிய வரகுணபாண்டியன் தன் தந்தையின் பெயரால் ஒருஊரை உருவாக்கி அதனை அந்தணர்களுக்கு தானமாக்கினார். அவர் இவ்வூருக்கு முதலில் வைத்த பெயர் ஸ்ரீவல்லப சதுர்வேதி மங்கலம் என்பதாகும் (நான்கு வேதங்களை சார்ந்த அந்தணர்களுக்கு தானமாக வழங்கபடும் பகுதிக்கு பிரம்மதேசம் (அ) சதுர்வேதிமங்கலம் என்ற பெயர் சூட்டப்படுவதாக தொல்வரலாற்று ஆசிரியர்கள் கூறுவர்). பின் சோழர்களின் ஆட்சிக்கு பாண்டியர் பகுதி உட்படும் போது இவ்வூரின் பெயரை சோழமன்னன் கங்கைகொண்ட சோழசதுர்வேதி மங்கலம் என மாற்றினார். மேலும் சோழமன்னனாகிய இராஜேந்திர சோழன் இத்திருக்கோவிலில் நடராஜமூர்த்திக்கு ஒரு மண்டபத்தை எடுப்பித்தார். ஆனால் சுவாமியின் பெயரை மாற்றவில்லை. சோழன் தன் தந்தையை போல் சாவாமூவாபேராடுகளையும் வழங்கியுள்ளார்.

பின் சோழரிடம் இருந்து மாற்றமடைந்து பாண்டியராட்சி ஏற்பட்ட பொழுது இவ்வூரின் பெயர் மீண்டும் ஸ்ரீவல்லப சதுர்வேதி மங்கலம் என்று அழைக்கபட்டது மீண்டும் பிற்கால பாண்டியர் காலத்தில் இவ்வூர் கங்கைகொண்டான் என்று அழைக்கபட்டது.

(வாமதேவரின் வேண்டுதலை ஏற்று கங்கையும், கங்கையின் பிரார்த்தனைக்கு இணங்க சிவபெருமானும் இங்குறைகிறார்கள். மற்ற எந்தகாரணத்தையும்விட, கங்கைகொண்டான் என்ற இந்த புண்ணியதலத்துக்கு இப்பெயர்வந்ததற்கு இதுவே அதிகப் பொருத்தம் உடையதாகத்தோன்றுகிறது.)

## திருக்கல்யாணத்திருவிழா குறித்த சிறப்பு:-

தமிழகத்தில் எங்கும் இல்லா சிறப்பாக, இத்தலத்தில் மட்டும் இறைவி திருகல்யாணத்திருவழா அன்று, தன்பிறந்த வீட்டிற்குசென்று பின், அவ்வீட்டில் வைத்து இறைவிக்கு பூஜை எல்லாம் முடித்த பின் தபசுக்கு, தன் பிறந்த வீட்டில் இருந்து புறப்பட்டுசெல்லுவதாகவும் பிறகு சுவாமி அம்பாளுக்கு காட்சி அளித்தலும், இரவு திருக்கல்யாணமும் , பட்டினபிரவேசமும் நடைபெறுகிறது.

**வஜனபீடம் :-**

இத்தலத்தில் ஒருவழக்கம் கடைபிடிக்கபட்டு வருகிறது.அம்பாள் சந்நிதியில் அம்பாளின் எதிரே அமைந்துள்ள, "ஸ்ரீசக்ரபீடம்" எனப்படும்,வஜனபீடத்தில் அமர்ந்து ஒருவர் நாற்ப்பந்தைந்து நாட்கள் விரதம் இருந்தால், அவரின் வேண்டுகோளுக்கு உண்டான பதிலை அம்பாள் அவரிடம் கூறுவதாக ஐதீகம். இவ்வாறு பலர் தமக்கு குழந்தை வரமவேண்டியும், தம்உடல் நிலை சரியாகவேண்டியும். தம் கணவரின் உடல்நிலை சரியாக வேண்டியும் விரதம் இருந்துள்ளனர். அதில் பலனும் பெற்றுள்ளனர்.அதற்கு நன்றி செலுத்தும் விதமாக, தங்கள் சொத்துக்களை சாசனம் செய்து வைத்துள்ளனர்.

இவ்வாறு விரதம் இருந்த ஒரு அந்தணதம்பதிகளுக்கு அன்னையே குழந்தையாக அவதரித்துள்ளார். அன்னையின் கருணைதான் என்னே!. இவ்வாறு அவதரித்த அன்னை கங்கைகொண்டான் கிராமத்தில்,தன் பூந்தளிர் பாதம் பட வளர்ந்து வந்துள்ளாள். ஒரு குறிப்பிட்ட காலத்தில் (அதாவது தன் ஒன்பதாம் வயதில்)தன்னை யார் என்று வெளிபடுத்திய அன்னை சுவாமியுடன் இரண்டற கலந்துவிட்டாள்.

**களவில் வந்து அன்னை கூறியது:-**

ஒரு மூதாட்டியின் கனவில் தம்மை யார் என்று வெளிபடுத்திய அன்னை தமக்கு ஆண்டுதோறும், தாம் பிறந்த வீட்டில் இருந்து தாரைவார்த்து கொடுத்து திருக்கல்யாணம் நடத்தி வைக்க கூறியதாகவும். அதன்படியே இன்றளவும் வழக்காறாக, கடைபிடிக்க பட்டு திருக்கல்யாணவிழா நடைபெற்று வருகிறது.(1977-ஆம் ஆண்டு சங்கரநாராயணசுவாமி திருக்கோவிலுடன் இணைத்திருந்தபோது வெளியிடப்பட்ட திருக்கோவில் வெளியீடு ).

## இத்தலத்தின் சிறப்புக்கள்:-

இத்தலம் தாமிரபரணி மகாமித்யத்தில் ஆதிகைலாயங்களுள் ஒன்றாக கூறப்பட்டுள்ளது. இங்கு முன்ஜென்ம பாவத்தால் உண்டாகும் நவகிரகதோஷ பாதிப்பு குறைய, இறைவனையும் இறைவியையும் பௌர்ணமி அன்று வலம் வந்து வழிபடுகின்றனர்.

**இத்தலம் கோளிலி தலமாகும்.**

நல்ல கணவர் அமையவேண்டி கன்னிப்பெண்களும், கணவர் நீண்ட ஆயுள் பெறவேண்டி திருமணமான பெண்களும், காலையில் எழுந்தவுடன் தலைக்குநீராடி, ஈரப்புடவையுடனோ, அல்லது தோய்த்துலர்ந்த தூய ஆடையுடனோ, பக்தியுடன் பச்சைமஞ்சளை அம்மியில் வைத்து அரைத்து அன்னைக்கு நீராட்ட கொடுக்கின்றனர். ஆடி மற்றும் தை செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் இதுபோன்ற பிரார்த்தனைகள் நிறைவேற்றப்படுகின்றன.

**மணக்கோல தலமும் ஆகும்**

குழந்தையில்லா தம்பதிகள் அன்னையிடம், குழந்தைவரம் வேண்டி கொண்டு செல்கின்றனர். குழந்தை பிறந்தபின், மரத்தொட்டில் ,கண்ணாடிவளையல் போன்றவைகளை அன்னையின் சன்னதியில் காணிக்கையாக செலுத்துகின்றனர்.

**சந்தான ப்ராப்தி அருளும் தலமும் ஆகும்**

ஞானம் பெறவிருப்பமுடையோர் வாமதேவரிஷி முன்பு துவாதசி அன்று தியானம் மேற்கொள்கின்றனர்.

**சித்தசுத்தி அருளும் சித்தர்களின் தலமும் ஆகும்.**

காமதேனு, கற்பகவிருட்சம்,சிந்தாமணி,வாமதேவரிஷி, அக்னி போன்றோர் வழிபட்ட தலமாகும்.காமதேனுவிற்கு அதன் பஞ்சகவ்ய பொருட்கள் (பிற)காரியங்களுக்கும் பயனளித்தாலும் குற்றம் அற்றது எனவும், கற்பகவிருட்சத்தை தலவிருட்ச புளியமரமாக இருக்கபணித்ததும்,வாமதேவரிஷிக்கு நவகிரகதோஷ பாதிப்பு உண்டாகாத இடம் எனவும்,அக்னிபகவானை தனது நெற்றிகண்ணாக ஏற்றதும். ஆக... **தேவர்களுக்கு இறைவன் வரமருளிய தலம் ஆகும்.**